# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்-
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 28 திருவள்ளுவர் ஆண்டு 2053 செப்டம்பர்-2022


## உள்ளே...



- சொற்பிறப்பியல் மருத்துவர் தொல்காப்பியர்
- மொழிக் குடும்பங்கள்
- நிகண்டுகளில் சொல்வளம் – கடல்
- சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022
- பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!









# பட்டுவளர்ச்சித்துறை கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Adult Moth | முதிர் பட்டுப்பூச்சி |
| Aestivation | கோடைகால உறக்கம் |
| Ant Well | எறும்பு தடுப்பான் |
| Ante Chamber | தடுப்பறை |
| Bivoltin | இருசுழற்சி இனம் |
| Black Boxing | இருட்டடைப்பு |
| Black Head Stage | கருப்புத் தலைப் பருவம் |
| Bobbin | பட்டு உருளை |
| Box rearing | பெட்டிப்புழு வளர்ப்பு |
| Bunch rearing | இலைக்கொத்து வளர்ப்பு |
| Bush Type Plantation | புதர்ச்செடி வளர்ப்பு |
| Cellular Rearing | குமிழ் வளர்ப்பு |
| Cocoon By product | பட்டுக்கூடு துணைப்பொருள் |
| Dead silkworm Eggs | இறந்த பட்டுப்புழு முட்டைகள் |
| Egg drying chamber | பட்டு முட்டை உலர்த்தும் கலன் |
| Eri Silkworm | எரி பட்டுப்புழு |
| Faecal Matter | பட்டுப்புழு கழிவு |
| Female Moth | பெண் பட்டுப்பூச்சி |
| Fibroin | பட்டிழைப் புரதம் |
| Filature | நூற்பாலை |
| Flimsy Cocoon | மெலிந்த பட்டுக்கூடு |
| Floss | பட்டுக்கூட்டு மேலிழை |
| Foliar Nutrients | இலைவழி ஊட்டம் |
| Graineur | பட்டு முட்டை ஆக்குநர் |
| Hibernation | குளிர்கால உறக்கம் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 (ஆவணி)
செப்டம்பர் – 2022

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# சொற்பிறப்பியல் மருத்துவர் தொல்காப்பியர்

பழந்தமிழர் நாகரிகம், பண்பாடு, கலை, வாழ்வியல் மட்டுமின்றி மொழியியலைத் தொகுத்துக்கூறும் நூல் தொல்காப்பியம். தொடக்கம் முதல் இறுவாய் வரை வாழ்வியல் வார்ப்பாகவே அமைந்தது இந்நூல். நம் முந்தையோர் வாழ்க்கையைக் காட்டியதுடன், பிந்தை மாந்தர்க்கும் வேண்டும் வாழ்வியல் கூறுகளை வகுத்துக் கூறி உயிரோட்டமாகத் திகழ்வது தொல்காப்பியம் ஆகும். தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்ற அதிகார அமைப்பில் உள்ளது. எழுத்ததிகாரத்தின் மூன்றாவது இயல் பிறப்பியல். தமிழ் எழுத்துகளின் பிறப்பியலைக் கூறும் தொல்காப்பியர் மூச்சுப் பயிற்சியின் ஆறு ஆதாரங்களில் எழுகின்ற ஒலி அதிர்வுகளே எழுத்துகள் பிறக்கக் காரணம் என்கிறார்.

"உந்தி முதலா முந்துவளித் தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலையிஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற்று அமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல
திறம்படத் தெரியும் காட்சி யான"

(தொல். எழுத்து. பிறப்பு.1)

கொப்பூழ் அடியாகத் தோன்றி மேலே எழுகின்ற காற்று தலையிலும், கழுத்திலும், நெஞ்சிலும் தங்குகிறது. பின்னர்த் தலை, கழுத்து, நெஞ்சு எனும் அம்மூன்றுடன் பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் உட்பட எட்டு இடங்களிலும் ஓர் உறுப்போடு ஓர் உறுப்பு பொருந்தி அமைய ஒலிகள் உருவாகின்றன. இவ்வாறு காற்று எழுந்து வெவ்வேறு உறுப்புகளின் வெவ்வேறு முயற்சிகளால் எழுத்துகள் பிறப்பதால் அவ்வெழுத்துகள் வெவ்வேறாகத் தோன்றுகின்றன. எண், வகை, அளவு, முறை என்பன போன்று பிறப்பியலும் எழுத்திலக்கணத்தின் ஒரு கூறாகும். எழுத்ததிகாரத்தின் முதன்மை நோக்கம் சொற்புணர்ச்சி இலக்கணம் என்பதால் அதற்குத் தேவையான கருவியாகப் பிறப்பியலை வகுத்துள்ளார்.

பிறப்பின் அடிப்படையில் 12 உயிர்களையும் தொல்காப்பியப் பிறப்பியல் மூன்று வகையாகக் கூறுகிறது.

"அவற்றுள்,
அ ஆ ஆயிரண்டும் அங்காந் தியலும்"

(தொல்.85)

"இ ஈ எ ஏ ஐ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய"

(தொல்.86)

" உ ஊ ஒ ஓ என இசைக்கும்
அப்பால் ஐந்தம் இதழ் குவிந்தியலும்"

(தொல். 87)

இந்த மூன்று வகைகளுள் நாவின் அசைவு தேவையின்றி அங்காத்தலாலும், இதழ் குவிதலாலும் மட்டும் அ, ஐ, உ, ஊ, ஒ, ஓ, ஔ எனும் ஏழு உயிர்கள் பிறக்கின்றன. உயிரும் ஈரும் சந்திக்கும் புணர்ச்சியில் ஏழு உயிர் ஈறுகளும், வகர உடம்படுமெய் கொள்கின்றன. இந்த வகர உடம்படுமெய்யும் நாவின் அசைவு தேவையின்றிப் பல்லும் இதழும் இயைவதால் தோன்றுவதாகும்.

"பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்"

(தொல். 98)

ஏழு உயிர்களும் வகர உடம்படுமெய் கொள்வதற்கு அவற்றின் பிறப்பே காரணம் என்கிறார் தொல்காப்பியர். இ, ஈ, எ, ஏ, ஐ என்னும் ஐந்து உயிர்களும் அண்ணமும் நாவும் தொடர்புடைய முயற்சியுடன் பிறப்பவை. இந்த ஈறுகள் இயல்பாக யகர உடம்படுமெய் கொள்கின்றன. (ஏகார ஈறு வகர உடம்படுமெய் பெறுவது விதிவிலக்கு). இந்த யகர உடம்படுமெய்யும், அண்ணமும் நாவும் தொடர்புடைய முயற்சியால் தோன்றுவதாகும்.

"அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்"(தொல்.99)

இந்த ஐந்து உயிர்களும் யகர உடம்படுமெய் கொள்வதற்கு அவற்றின் பிறப்பே காரணமாகிறது.

மெய்யெழுத்துகள் வாய் அங்காப்போடு, நெடுங்கணக்கு வரிசையில் கூறும்போது,

க, ஞ – முதல்நா அண்ணத்தைத் தொடப் பிறக்கும்

ச, ஞ – இடைநா அண்ணத்தைத் தொடப் பிறக்கும்

ட, ண – நுனிநா அண்ணத்தைத் தொடப் பிறக்கும்.

இவை ஆறும் ஒருவகைப் பிறப்பு என்கிறார்.

எழுத்தொலிகள் தோன்றுவதற்குத் தேவைப்படும் உறுப்புகளாகத் தொல்காப்பியர் எட்டு உறுப்புகளைக் குறிப்பிடுகிறார். இந்த எட்டு உறுப்புகளையும் இரண்டு பிரிவாக வகைப்படுத்துகிறார்.

- காற்று பொருந்தும் உறுப்புகள்
- ஒன்றுடன் ஒன்று ஒத்துழைக்கும் உறுப்புகள்

காற்று பொருந்தும் உறுப்புகள் என்பன தலை, கழுத்து, நெஞ்சு ஆகும். ஒன்றுடன் ஒன்று ஒத்துழைக்கும் உறுப்புகள் தலை, கழுத்து, நெஞ்சு ஆகிய மூன்றுடன் பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகிய ஐந்தும் சேர்ந்து எட்டாகும். மெல்லின எழுத்துகள் மூக்கின் காற்றோடு சேர்ந்து பிறக்கும் என்று சிறப்பு வகையால் குறிப்பிடுகிறார்.

"மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளியின் நிலையின ஆயினும்
மூக்கின் வளி இசை யாப்புறத் தோன்றும்"
(நூற்பா. 18)

குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் எனும் மூன்று சார்பெழுத்துகளும் மொழியில் பிற எழுத்துகளைச் சார்ந்து வருவதல்லது, தமக்கென்று தனி இயல்பு இல்லாதவை. ஆதலால் சார்ந்து வரும் எழுத்தொடு கூடி ஒலித்துத் தம் இயல்பைக் காட்டும் என்கிறார்.

"யாப்பு" என்னும் சொல்லுக்குச் செய்யுள் என்று பொருள். நரம்பு, தோல், தசை, எலும்பு, கொழுப்பு, குருதி முதலியவற்றால் யாக்கப்பட்ட உடலை யாக்கை என்பது போல, எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலியவற்றைக் கொண்டு கட்டப்படுவது யாப்பு என்று அழைக்கப்படுகிறது. இவை செய்யுளுக்கு உரிய உறுப்புகள் ஆகும். எழுத்து முதலெழுத்து, சார்பெழுத்து ஆகும். எழுத்துகள் தனித்தோ தொடர்ந்தோ தக்க ஒலியும் சீருக்கு உறுப்பாகி வந்தால் அசை என்கிறோம். அசைகள் பல இயைந்து நிற்பது சீர் எனப்படும். சீர்கள் இயைந்து கட்டப்பட்டு நிற்பது தளை ஆகும். தளைகள் அடுத்து நடப்பது அடி எனப்படும். செய்யுளில் எதுகை, மோனை முதலாகத் தொடுக்கப்படுவது தொடையாகும். செய்யுள் உறுப்புகளால் ஆகிய பாக்கள் நான்கு வகைப்படும். அவை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா முதலியவையாகும்.அடிப்படையிலேயே பாவகைகள் ஒன்றுக்கொன்று வேறுபட்டு நிற்கின்றன.

செப்பலோசை உடையது வெண்பா

அகவலோசை உடையது ஆசிரியப்பா

துள்ளலோசை உடையது கலிப்பா

தூங்கலோசைஉடையது வஞ்சிப்பா

வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்து வருவது மருட்பா

- செப்பல் என்றால் செப்புதல், உரைத்தல், விடைகூறுதல். வினாவிற்கு விடை கொடுப்பது போன்ற ஓசை இருப்பதால் செப்பலோசை எனப்படுகிறது.
- அகவல் என்றால் அழைத்தல் என்று பொருள்படும். ஒவ்வொரு அடியும் தனியே அழைக்கும் வகையில் அமைவதால் அகவல் எனப்படும்.
- கலி – துள்ளல். அலைகள் தள்ளுவது போலச் சொற்கள் அமைவதால் துள்ளலோசை என்பர்.
- தூங்கல் என்றால் தொங்கல் என்றும் பொருள்படும். நெடுஞ்சீர்களால் அமைந்திருப்பதால் இப்பெயர் ஏற்பட்டது.
- மருள் என்றால் கலத்தல். வெண்பாவின் செப்பலோசையும் ஆசிரியப்பாவின் அகவலோசையும் கலந்து வருவதால் மருட்பா ஆனது.

"ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே"

தமிழ்மொழியின் மற்றொரு சிறப்பு "ஓரெழுத்தொருமொழி". அதாவது ஒற்றை எழுத்தே சொல்லாகப் பொருள் தருவது. இந்த ஒற்றை எழுத்துச் சொற்களும் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நால்வகைப் பாகுபாட்டில் வந்துவிடும்.

"ஓரெழுத்து ஒருமொழி, ஈரெழுத்து ஒருமொழி
இரண்டு இறந்து இசைக்கும்
தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே"
(தொல். 45)

ஓரெழுத்தொருமொழி – இரண்டு மாத்திரைக்கு மிகாத சொல்

ஈரெழுத்தொருமொழி – இரண்டு மாத்திரைக்கு மிகாத சொல்

இரண்டிறந்து இசைக்கும் தொடர்மொழி – இரண்டு மாத்திரையின் மிக்கு ஒலிக்கும் சொல் என்பது இதன் பொருளாகும்.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"
(தொல். சொல். 157)

தமிழில் உள்ள மொத்த எழுத்துகளான 247இல் 42 எழுத்துகள் ஓரெழுத்துச் சொற்களாக உள்ளன.

ஒவ்வோர் எழுத்தும் பேச்சொலியாக இருந்து பின்பே எழுத்தொலியாகப் பதிவுசெய்யப்பட்டன. எனவே பேச்சிற்கு அடிப்படையாக அமையும் ஒலிகள் எவ்வாறு உருவாயின என்பதைத்தான் இலக்கண நூலாசிரியர்கள் ஆராய்ந்து கூறினர். உடலில் இருந்து தோன்றி எழும் காற்று எழுத்தொலியாக வெளிப்படுவதே எழுத்துப் பிறப்பு என்றனர். ஒலிகள் பிறப்பதற்கு உயிரின் முயற்சியும் உறுப்புகளின் ஒத்துழைப்பும் இன்றியமையாதன. சொற்புணர்ச்சி என்பது வாயறையில் ஒலியுறுப்புகளின் வழியாக நிகழ்வதேயன்றி எழுத்தில் நிகழ்வதன்று. சேர்ந்தொலிக்கும் இரு சொற்களை ஒலியுறுப்புகள் தாம் எளிதாகவும் விரைவாகவும் ஒலிப்பதற்கு ஏற்ற விதமாகச் செய்யும் மாற்றமே ஒலிசார்ந்த சொற்புணர்ச்சியாகும். எழுத்துகளைப் பிறப்பிக்கும் ஒலியுறுப்புகளே சொற்புணர்ச்சி மாற்றங்களையும் நிகழ்த்துவதால் பிறப்பியல் சொற்புணர்ச்சியுடன் தவிர்க்க இயலாததாகிறது.

தமிழ்க் கடவுளான முருகப் பெருமானை நினைத்து அருணகிரிநாதர் அருளிய "கந்தரனுபூதி"யை வாய்விட்டுப் படித்தோம் என்றால் குருதியழுத்தம் சீராவதை, நலம் மேம்படுவதைக் கவனிக்க முடியும். மெல்லினத்தில் தொடங்கி இடையினத்தில் தொடர்ந்து வல்லினத்தில் முடியும் 51 பாடல்களையும் பாடி முடிக்கும்போது குருதிநாளங்கள் பிராணாயாமம் எனும் மூச்சுப் பயிற்சி செய்த பயனை அது நல்கும்.

1610 நூற்பாக்களாலான தொல்காப்பியத்தை இயற்றிய தொல்காப்பியர் 3000 ஆண்டுகளுக்கு முன்பே ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் எனப் பாகுபாடு செய்து "மக்கள் தாமே ஆறறிவுயிரே பிறவும் உளவே அக்கிளை பிறப்பே" என்றார். இப்படி ஒரு ஆய்வாளராக, சிந்தனையாளராக, பண்பாட்டு அறிஞராக, மருத்துவராக, இயற்கை ஆர்வலராக, தொலைநோக்குச் சிந்தனையாளராக, தேர்ந்த மொழியியல் அறிஞராக வாழ்ந்த தொல்காப்பியரைப் போற்ற, தொல்காப்பியத்தை வாசிப்போம்; தமிழ்மொழியினை நேசிப்போம். நிற்க.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்ற தொல்காப்பியரின் கருத்தொற்றி, தமிழில் சொற்பிறப்பியல் ஆய்வை முன்னெடுத்த "மொழிஞாயிறு" தேவநேயப் பாவாணரின் கோட்பாடுகளின் அடிப்படையில், சொற் கருவூலங்களான அகராதிகளை உருவாக்குதல், தமிழ்க்கலைச்சொல்லாக்கம் ஆகிய மொழிக்காப்புப் பணிகளை இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிறது. இந்த மொழிக்காப்புப் பணிக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின்,"மொழிக்குடும்பங்கள்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களின், "நிகண்டுகளில் சொல்வளம் – கடல்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், பயிலரங்கின் 50ஆவது அமர்வில் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிய அகராதியில் அறிஞர்கள் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்கள், முனைவர் வ.ஜெயதேவன் அவர்கள், பேராசிரியர் மரு. மு.செம்மல் (சவுதி அரேபியா) அவர்கள், திரு. இரா. திருமாவளவன் (மலேசியா) அவர்கள், மின்னசச்ன் திரு. இங்கர்சால் (நார்வே) அவர்கள் ஆகியோருக்கு என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா.பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

**தனிமைச் சுவையுடைய சொல்லை – எங்கள்**
**தமிழினும் வேறெங்கும் யாம் கண்டதில்லை!**
– பாவேந்தர் பாரதிதாசன்

# மொழிக் குடும்பங்கள்

அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



"அங்கம், வங்கம், கலிங்கம், கௌசிகம், சிந்து, சோனகம், திராவிடம், சிங்களம், மகதம், கோசலம், மராடம், கொங்கணம், துளுவம், சாவகம், சீனம், காம்போஜம், பகுணம், பப்பரம் எனப் பதினெண் பாடை" திவாகரம்

**– பாபெல் கோபுரம் Babel Tower**



மனிதர்கள் ஒன்று கூடி வானை முட்டக்கூடிய அளவுக்கு ஓர் உயர்ந்த கோபுரத்தைக் கட்டிக்கொண்டிருந்தனர். கோபுரத்தின் உயரத்தைப் பார்த்ததும் கடவுளுக்குப் பயம் ஏற்பட்டு விட்டது. அதனால், அதை ஒற்றுமையாக ஒன்றுசேர்ந்து கட்டிய மனிதர்களுக்கிடையில் குழப்பம் உண்டாக்கத் திடீரெனப் பலமொழிகளைப் படைத்தாராம். அம்மனிதர்களின் மொழிகள் வெவ்வேறாக இருந்ததினால், ஒருவர் பேசுவது இன்னொருவருக்கு விளங்கவில்லை. இதன்விளைவாகக் கட்டப்பட்ட கோபுரம் இடையிலேயே கைவிடப்பட்டதாம். இவ்வாறு குறையாக விடப்பட்ட கோபுரம்தான் பாபெல் கோபுரம் *Babel Tower* எனக் கூறப்படுகிறது. இது வேதாகமத்தில் உள்ள கதை எனப்படுகிறது. ஆயினும் இதையொத்த கதைகள் பாபிலோனிய, சுமேரிய, கிரேக்க, குரானிய, மெக்ஷிக்கோ முதலான நாகரிகங்களிலும் நிலவுகின்றன.

உலகின் பலநாடுகளில் ஆயிரக்கணக்கான மொழிகள் பேசப்படுகின்றன. பதினாறாம் நூற்றாண்டில் 14,000 மொழிகள் இருந்தனவென்றும், கடந்த 2006இல் 69,00 மொழிகளாகக் குறைந்து விட்டனவென்றும் யுனெஸ்கோ (UNESCO) தகவல்களும், The Ethnologue – Summer Institute of Linguistics போன்ற மொழியியல் தரவுகளும் தெரிவிக்கின்றன. தற்போது 6912 மொழிகள் பேசப்படுகின்றன என்று அமெரிக்க நிறுவனமான Summer Institute of Linguistics –க்கும், 6528 என UNESCO –வும் கூறுகின்றன.

## தற்போது உலகில் வழங்கப்படும் மொழிகள்

| கண்டம் | மொழிகளின் எண்ணிக்கை | விழுக்காடு |
|---|---|---|
| ஆசியா | 2269 | 32.7% |
| ஆபிரிக்கா | 2092 | 30.3 % |
| பசிபிக் | 1310 | 19.0% |
| அமெரிக்கா | 1002 | 14.5% |
| ஐரோப்பா | 239 | 3.5% |
| உலகம் | 6912 | 100% |

மூலம் : Summer Institute of Linguistics

உலகமொழிகளின் வரலாற்றை அறிவதற்கான அறிவியல் முயற்சிகள் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் மேற்கொள்ளப்பட்டன. மொழித்தொகுதிகளை ஒலி, சொற்கள், இலக்கணம் ஆகிய அடிப்படைகளில் ஒப்பிட்டு ஒற்றுமைகளை மொழியியலறிஞர்கள் ஆராய்ந்தனர். இவ்வாறான மொழிகளின் ஒப்பீட்டு ஆராய்ச்சிகளுக்கு ஐரோப்பிய மொழிகளை ஒப்பீடு செய்து பெற்ற முடிவுகள் பிறமொழிகளையும் ஒப்பிட்டறிய வழிகோலின. முதற் படியாக பிரெஞ்சு, இஸ்பானியம், இத்தாலியம் ஆகிய மொழிகள் இலத்தீனிலிருந்து பிறந்தவை என்பது நிறுவப்பட்டதிலிருந்து மற்றமொழிகளை ஒப்பீடு செய்யும் மொழியியல் முறை வளர்ந்தது. மொழிகளுக்கிடையிலான ஒற்றுமை – வேற்றுமை அடிப்படையில் மொழிகள் எல்லாம் குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மொழிகளுக்கிடையில் இனத்தொடர்பு ரீதியான ஒற்றுமைக்கூறுகள் பொது அம்சமாகக் காணப்படுகின்றன. மொழிகள் அனைத்தையும் ஒற்றுமைப்படுத்தி ஆராயும் போது, அவற்றுக்கு எல்லாம் தாயாக, மூலமொழியாக ஒன்று இருந்திருத்தல் வேண்டும். இம்மூலமொழி தொல்மொழி (Proto language) என அழைக்கப்படும் என மொழியியல் ஆய்வாளர்கள் முடிவு செய்தனர். எடுத்துக்காட்டாக, இலத்தீன் தாய் மொழியாக (Parent language) இருக்க, பிரெஞ்சு, இத்தாலியம், இஸ்பானியம், போர்த்துக்கேயம் போன்ற மொழிகள் மகள் மொழிகளாக (Daughter languages) அமைகின்றன. இம்மொழிகள் ரோமானிய அல்லது இலத்தீனிய மொழிகள் (Roman languages) எனப்படுகின்றன.




இலத்தீனில் bonus என்றால் நல்ல எனப் பொருள்படும். இந்த இலத்தீன் சொல் பிரெஞ்சில் bon எனவும், இத்தாலியத்தில் buono எனவும், இஸ்பானியத்தில் bueno எனவும், போர்த்துக்கேயத்தில் bom எனவும் உருவம் பெற்றது.

இவ்வாறு ஐரோப்பிய மொழிகளான கிரேக்கம், இலத்தீனை இந்திய மொழியான சமஸ்கிருதத்துடன் ஒப்பிட்டு இம்மொழிகளுக்கிடையில் குடும்ப உறவு இருப்பதை, 28 மொழி களில் ஆழ்ந்த அறிவுடைய கல்கத்தாவில் நீதிபதியாக இருந்த சர் வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) 1786இல் நிறுவினார். இம்மொழிகளை இந்தோ – ஐரோப்பியக் குடும்ப மொழிகள் என அடையாளப் படுத்தினார். இந்திய மொழிகளை ஆராய்ந்த பேராசிரியர் பிரான்சிஸ் வைட் எல்லிஸ் (Francis Whyte Ellis) தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகியவை தனிக்குடும்பத்து மொழிகள் என்று 1816இல் எழுதிய முன்னுரையில் குறிப்பிட்டிருந்தார். இம்மொழிகளை ஆராய்ந்து திராவிடம் என 1856 இல் பெயர் கொடுத்தார் டாக்டர் இராபர்ட் கால்டுவெல் (Robert Caldwell)




**தொல் திராவிடம்**

| தென்திராவிட மொழிகள் | நடுத்திராவிட மொழிகள் | வடதிராவிட மொழிகள் |
|---|---|---|
| தமிழ், மலையாளம், கன்னடம், குடகு, துளு, தோடா .... | தெலுங்கு, கோண்டி, கோயா, கூயி, நாயக்கி, ஐதபு... | குருக், மால்தோ, பிராகுய்... |

**–திராவிட மொழிகள்**

| தமிழ் | மலையாளம் | கன்னடம் | தெலுங்கு |
|---|---|---|---|
| நான், யான்<br>நான்கு, நாலு<br>கண்<br>மூக்கு<br>முட்டை | ஞான்<br>நாலு<br>கண்ணு<br>மூக்கு<br>முட்ட | நானு<br>நால்கு<br>கண்ணு<br>மூக்கு<br>மொட்ட | நேனு<br>நாலுகு<br>கண்ணு<br>மூக்கு<br>குட்டு |

**–இந்தோ – ஐரோப்பிய மொழிகள்**

| சமஸ்கிருதம் | கிரேக்கம் | இலத்தீன் | கோதிக் | தமிழ் |
|---|---|---|---|---|
| eka<br>pitar<br>dasa | heis<br>pater<br>deka | unus<br>pater<br>decem | ains<br>fadar<br>taihun | ஒன்று<br>தந்தை–பிதா<br>பத்து |

- ரோமானிய அல்லது இலத்தீன் மொழிகள்

| பிரெஞ்சு | இத்தாலியம் | இஸ்பானியம் | போர்த்துக் கேயம் | கத்தலன் | ருமேனியம் | தமிழ் |
|---|---|---|---|---|---|---|
| un | uno | uno | um | un | un | ஒன்று |
| animal | animale | animal | animal | animal | animal | விலங்கு |
| famille | famiglia | familia | familia | familia | familie | குடும்பம் |
| langue | lingua | lengua | lingua | llengua | limba | நாக்கு |
| pain | pane | pan | pao | pa | pâine | ரொட்டி – பாண் |
| aimer | amare | amar | amar | estimar | a iubi | நேசித்தல் |

- ஜெர்மனிய மொழிகள்

| ஆங்கிலம் | ஜேர்மன் | டச்சு | சுவீடியம் | டேனிஷியம் | நோர்வேஜியம் | தமிழ் |
|---|---|---|---|---|---|---|
| one | eins | een | en | en | en | ஒன்று |
| family | Familie | familie | familje | familie | familie | குடும்பம் |
| tongue | Zunge | tong | tunga | tunge | tunga | நாக்கு |
| bread | Brot | brood | brod | brod | brod | ரொட்டி – பாண் |
| yes | ja | ja | ja | ja | ja | ஆம் |
| good | gut | goed | god | god | god | நல்ல |

– ஸ்லாவிய மொழிகள்

| ருஷ்யம் | போலந்து | செக் | ஸ்லவாக் | செர்பிய குரொசியம் | பல்கேரியம் | தமிழ் |
|---|---|---|---|---|---|---|
| adin | jeden | jeden | jeden | jedan | edno | ஒன்று |

- இந்திய ஆரிய மொழிகள்

| சமஸ்கிருதம் | ஹிந்தி | பெங்காலி | குஜராத்தி | மராத்தி | சிங்களம் | பெர்சியம் | தமிழ் |
|---|---|---|---|---|---|---|---|
| eka | ek | ek | ek | ek | eka | yek | ஒன்று |

– இந்திய ஐரோப்பியம் அல்லாத மொழிகள்

| ஹங்கேரியம் | ஃபின்னியம் | துருக்கியம் | பாஸ்க் | ஜோர்ஜியம் | எஸ்தோனியம் | தமிழ் |
|---|---|---|---|---|---|---|
| egy | yksi | bir | bat | erti | uks | ஒன்று |

தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் தொல்திராவிடத்தைத் (Proto – Dravidian) தாயாகக்கொண்ட சகோதரி மொழிகள். இவ்வாறே ஆங்கிலம், ஜெர்மன், டச்சு, ஃப்லாமன்ட் ஆகியவை ஜெர்மனியத்தைத் (Proto – Germanic) தாயாகக் கொண்டவை. பிரெஞ்சு, இஸ்பானியம், இத்தாலியம், போர்த்துக்கேயம், புரோவன்ஸால், ரோமேனியம் ஆகியவை இலத்தீனைத் தாயாகக் (Proto – Romance) கொண்டவை. ருஷ்யம், போலந்து, செக், ஸ்லவாக், பல்கேரியம், செர்பிய – குரொசியம் முதலான மொழிகள் தொல் – ஸ்லோவேனியத்தைத் (Proto – Slovonic) தாயாகக் கொண்டவை.




உலகில் 94 மொழிக் குடும்பங்கள் உள்ளன என மொழிநூல்கள் குறிப்பிடுகின்றன. உலக மக்கள் தொகையில் 96% அதிகமான மக்கள் முதல் பத்து மொழிக் குடும்பங்களில் அடங்க, மீதி 4% மானவர்கள் 84 குடும்பங்களில் அடங்குவர். ஆயினும் தற்போது 26 பெரிய குடும்பங்கள் கணக்கில் எடுக்கப்படுகின்றன. இவற்றுள் இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்பம் (Indo–European Family), சீன – திபெத்தியக்குடும்பம் (Sino – Tibetan Family), திராவிட மொழிக் குடும்பம்(Dravidian Family), ஆபிரிக்க – ஆசிய மொழிக்குடும்பம் (Afro –Asiatic Family), நிஜெர் – கொங்கோ குடும்பம் (Niger – Congo Family), யப்பான் – கொரிய மொழிக் குடும்பம் (Japon – Korean Family), செமிட்டோ – ஹெமிட்டிக் மொழிக்குடும்பம் (Semito – Kemitic Family), உராலிக் – அல்டாய்க் மொழிக்குடும்பம் (Uralic – Altaic Family), உற்றோ – அல்ஜெக் மொழிக்குடும்பம் (Uto –Aztec Family) என்பன குறிப்பிடத்தக்கவை.

மொழிக் குடும்பங்களும் பேசுவோர் தொகையும்

| **மொழிக் குடும்பங்கள்** | **பேசுவோர் தொகை (%)** | **மொழிக்குடும்பம் (%)** |
|---|---|---|
| இந்தோ – ஐரோப்பியம் | 43.50% | 6,30% |
| உராலோ – அல்டாய்க் | 6% | 1.50% |
| சீன – திபெத்தியம் | 21% | 5.50% |
| ஆஸ்திரிக் | 7.50% | 23% |
| திராவிடம் | 4% | 1.20% |
| ஆபிரிக்க – ஆசியம் | 7% | 5.50% |
| ஆபிரிக்கம் | 10% | 25% |
| பிற | 1% | 32% |

26 பெரிய மொழிக் குடும்பங்கள்

| | | |
|---|---|---|
| 01. ஆ.ஃப்ரோ – ஆசியம். | 10. ஹோகான் – சிஉ ஆன் | 20. நீக்ரோ – கொடொ.ஃபானியென் |
| 02. ஆல்கொன்குயிஎன் | 11. இந்தோ – ஐரோப்பியம் | 21. மக்ரோ ஒற்றோ – மங்கெயென் |
| 03. ஆல்டாய்க் | 12. இந்தோ–பசுபிக் | 22. பலெயோ–சைபீரியென் |
| 04. ஆன்டோ – எகுஆரோறிஎன் | 13. யப்பானியம் | 23. பெனுற்றியான் |
| 05. ஆஸ்த்ரலோ – அபொறிஜின் | 14. கொய்ஸன் | 24. சினோ – திபெத்தியம் |
| 06.ஆஸ்த்ரலோ–ஆசியம் | 15. கொரியன் | 25. தாய். |
| 07. ஆஸ்த்ரோனேசியன் | 16. மக்ரோ – சிப்ஷான் | 26. ஆஜேற்கோ – தனோஆன் |
| 08.கோக்காஸிஎன் | 17. உராலியென் | |
| 09.ஜே–பனோ–கரீபியன் | 18. நா – டெனெ | |
| | 19. நீக்ரோ – கொங்கொலெ | |

இம்மொழிக் குடும்பங்களில் இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்பமே மிகப்பெரிய குடும்பம். இப்பெரிய குடும்பத்தில் 8 உப – குடும்பங்களும் 430 மொழிகளும் உள்ளன (இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்ப வரிப்படம் பார்க்க.). இம்மொழிகள் பற்றிய ஆராய்ச்சியே மொழிக்குடும்பக் கருத்துருவுக்கு வித்திட்டது. உலக மக்கள்தொகையினரில் கிட்டத்தட்ட அரைவாசிப்பேரால் பேசப்படும் இம்மொழிக் குடும்பத்திற்கு வரலாற்று மொழியியலில் முக்கிய சிறப்பிடம் இருக்கிறது.. இந்தியாவில் 1300க்கு மேற்பட்ட மொழிகள் பேசப்படுவதாக அறியப்படுகிறது. இம்மொழிகள் இந்தோ – ஆரிய மொழிகள், திராவிட மொழிகள், ஆஸ்திரோ – ஆசிய மொழிகள், சீன – திபெத்திய மொழிகள் எனநான்கு குடும்பமொழிகள் அடங்கும். செவ்வியல் மொழியானசமஸ்கிருதத்திலிருந்து கிரேக்கமும், கிரேக்கத்திலிருந்து இலத்தீனும் பிறந்ததாக ஒரு நம்பிக்கை நிலவியிருந்தது. இம்மொழி கிரேக்கம், இலத்தீன் போன்ற செவ்வியல் மொழிகளை விடச் சிறந்த மொழி என்றால் மிகையில்லை என்பார்கள் சர் வில்லியம் ஜோன்ஸ் போன்ற அறிஞர்கள். இம்மொழியிலிருந்து ஹிந்தி, பெங்காலி, மராத்தி, சிந்தி, உருது, குஜராத்தி, நேப்பாளி ஆகிய மொழிகள் தோன்றின.




மொழிகள் அதிகம் உள்ள நாடு ஆபிரிக்கா. ஆபிரிக்காவில் பேசப்படும் மொழிகள் ஆபிரிக்க – ஆசியம், நிலோ – சகாரா, நிஜெர் –கொங்கோ ஆகிய மூன்று பெரிய மொழிக் குடும்பங்களில் அடங்குகின்றன. ஆபிரிக்காவின் வடக்கிலும், வடகிழக்கிலும் அரபு மொழி உள்ளது. சுவாகிலி கிழக்காபிரிக்காவில் பேசப்படுகிறது. ஹோஸா, பம்பரா, மலிங்கா, வொலொ.ஃப், கொங்கோ, லிங்கலா, ஜூலு, பந்து போன்ற மொழிகளும் குறிப்பிடத்தக்க மொழிகள்.

மண்ணுக்குரிய மொழிகள் அழிக்கப்பட்ட கண்டம் அமெரிக்கக்கண்டம். கிட்டத்தட்ட 300 மொழிகள் செவ்விந்தியர்களால் பேசப்பட்டன. இம்மொழிகள் 1970 இல் எடுக்கப்பட்ட கணக்குப்படி அரைவாசியாக இருந்தன. இந்நாட்களில் ஓர் ஐம்பதுமொழிகளே வயது முதிந்தவர்களால் பேசப்படுகின்றன. அமெரிக்க மொழிகள் ஐம்பதிற்கும் மேற்பட்ட குடும்பங்களாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. எஸ்கிமோ – அலெயுற், நா–டெனெ, அதபஸ்கான், அல்கொன்குயினென், பெனுற்றியான், மாயன், கொக்கன் எனப் பல குடும்பங்கள் உள்ளன. யுபிக், அரபகோ, செய்யென், கிறெ, மிக்மக், ஒஜிப்வா, பொதவதொமி, மொகவக், செரொக்கே, மாம்ஈ கெக்ஷி, மபுடுங்கன், உறு முதலான மொழிகள் வழக்கில் உள்ளன.

## முதல் பத்து மொழிக்குடும்பங்கள்

| மொழிக்குடும்பம் | உலக மக்கள்தொகையில் விழுக்காடு | வழங்கும் இடங்கள் |
|---|---|---|
| இந்தோ – ஐரோப்பியன் | 46% | ஐரோப்பா, தென்மேற்கு – தென்கிழக்கு ஆசியா, அமெரிக்கா, ஒசியானியா |
| சினோ – திபெத்தியன் | 21% | கிழக்கு ஆசியா |
| நிஜெர் – கொங்கோ | 6.4% | ஆபிரிக்க சகாரா |
| ஆபிரிக்க – ஆசியம் | 6.0% | வடஆபிரிக்கா, கிழக்கு ஆபிரிக்கா, தென்மேற்கு ஆசியா, |
| ஆஸ்த்ரோனேசியம் | 5.9% | ஓசியானியா, மடகஸ்கார், தென்கிழக்காசிய கடற்பகுதி |
| திராவிடம் | 3.7% | தென் ஆசியா |
| அல்டாய்க் | 2.3 % | மத்தியஆசியா, வடக்கு ஆசியா, அனற்றோலியா, சைபீரியா |
| யப்பானியம் | 2.1% | யப்பான் |
| ஆவுஸ்திரே – ஆசியம் | 1.7% | தென் கிழக்காசியா |
| தாய் – கடை மொழிகள் | 1.3% | தென் கிழக்காசியா |

## மொழிக்குடும்பங்களும் அவற்றின் மொழிகளும்

| மொழிக்குடும்பம் | மொழிகள் | மொழிக்குடும்பம் | மொழிகள் |
|---|---|---|---|
| நிஜெர் – கொங்கோ | 1532 | பமா – நுவுங்கன் | 178 |
| ஆஸ்த்ரோனேசியம் | 1257 | ஒற்றோ– மாங்குயென் | 177 |
| நியூ கினியா | 477 | ஆவுஸ்திரே – ஆசியம் | 169 |
| சினோ – திபெத்தியன் | 449 | தாய் – கடை மொழிகள் | 92 |
| இந்தோ – ஐரோப்பியன் | 439 | திராவிடம் | 85 |
| ஆபிரிக்க – ஆசியம் | 374 | துபியன் | 76 |
| நிலோ – சகாரா | 205 | பாஸ்க் | 01 |

ஐரோப்பாவில் வழங்கப்படும் மொழிகள் இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்பம் அல்லாத வேறு ஐந்து மொழிக்குடும்பங்களைச் சேர்ந்தனவாகவும் உள்ளன. அவையாவன : 1.ஃபின்னோ – உக்றியென். 2. ஆல்டாய்க். 3. பாஸ்க் கோக்காஸியென். 4.சேமிட்டிக் 5. குறோன்லான்ட்டிக். –

இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்பத்தில், 1. ரோமானிய (இலத்தீனிய) மொழிகள். 2. ஜேர்மானிய மொழிகள். 3. ஸ்லாவிய மொழிகள். 4. பால்டிக்– ஸ்லாவிய மொழிகள். 5, கிரேக்கம். 6. செல்டிக் மொழிகள். 6. துராக்கோ – இல்லிறியென். 7. இந்தோ – ஈரானிய மொழிகள் எனும் ஏழு உப – மொழிக் குடும்பங்களும் உண்டு.

– ஃபின்னோ – உக்றியென் (Finno Ougrien Family) குடும்ப மொழிகள் : ஹங்கேரியம், கரெலியென், லபொன், மான்ஸி

–ஆல்டாய்க் (Altaic Family) குடும்ப மொழிகள் :
- துருக்கிய – தத்தார் கிளை : துருக்கியம், அஜெரி, தத்தார்,
- மங்கோலிய கிளை : கலமிக்

–பாஸ்க்–கோக்காஸியென்(Basque– Caucasien Family)
- பாஸ்க் கிளை : பாஸ்க் குடும்ப மொழிகள்:
- கோக்காஸியென் கிளை : ஜோர்ஜியென்

– சேமிட்டிக் (Semitic Family) குடும்ப மொழிகள் : மால்டேஸ்
– குறோன்லான்ட்டிக் (Groenlandic Family) குடும்ப மொழிகள் : எஸ்கிமோ.
– சினோ – திபெத்தியன்

| சீனம் | திபெத்தியம் | தமிழ் |
|---|---|---|
| shui | chhu | தண்ணீர் |
| ming | ming | பெயர் |
| gou | go | போ |

| சீனம் | யப்பானியம் | கொரியன் | தமிழ் |
|---|---|---|---|
| xin wen | shimbun | sin mun | நாளிதழ் |
| yin hang | gingo | Unhaeng | வங்கி |
| dian hua | denwa | tchon hwa | தொலைபேசி |

தொல் – இந்தோ – ஐரோப்பிய மொழிக்குடும்ப மரம் – Proto - Indo - European Family Tree




## பெரிய குடும்ப மொழிகள் வழங்கும் இடங்கள்



ஒரே இடத்தில் பேசப்பட்ட ஒரு மொழி, மக்கள் பெருக்கத்தினால், ஏதாவது சூழல் காரணத்தால், அம்மொழியைப் பேசுவோர்க்கிடையில் தொடர்பு குறைந்து அல்லது அற்றுப்போக, புலம்பெயர, அவர்கள் பேசிய மொழி மாறிப்போக, காலப்போக்கில் அது இன்னொரு மொழியாகிற வரலாறும் மொழி வரலாற்றில் ஏற்பட்டிருக்கிறது. உதாரணத்துக்கு, திராவிடக் குடும்பமொழிகளை, செமிட்டிக் குடும்ப மொழிகளை எடுத்துக்கொள்ளலாம். தமிழுக்கும் மலையாளத்துக்கும் ஏற்பட்ட உறவை எடுத்துக்கொள்ளலாம். செமிட்டிக் மொழி கிழக்கு, மேற்கு, தென் மொழி எனப் பாகுபாடு பெற்றிருந்தது. கிழக்கு மொழிகள் : பாபிலோனியம், அசிரியம்; மேற்கு மொழிகள்: மொஆபிற், போனிசியம், அராமிக், ஹீப்று; தென் மொழிகள் : அராபிக்; கிழக்கு மொழிகள் அழிந்து விட்டன. மேற்குமொழிகளில் ஹீப்றுவும், தென் மொழிகளில் அராபிக்கும் வளம் பெற்று உயிர்வாழ்கின்றன. உலகில் உள்ள பல்லாயிரக்கணக்கான மொழிகள் தமக்கிடையில் உறவு கிட்டிய மொழிகளாக இருக்கின்றன. உறவு தூர உள்ள மொழிகளாகவும் உள்ளன. ஏதோவொரு வகையில் தொடர்பு உடைய மொழிகளாகத் தென்படுகின்றன. தொடர்பில்லாத மொழிகளாகக் காணப்படுகின்றன. இந்த வகையில் குடும்ப மொழி உறவு தீர்மானிக்கப்படுகிறது. திராவிடர்களுக்கிடையில் ஒற்றுமையையும் காணலாம். வேற்றுமையையும் காணலாம். சீனர்களுக்கிடையிலும் யப்பானியர்களுக்கிடையிலும் ஒற்றுமையையும் காண லாம். வேற்றுமையையும் காணலாம். ஆனால் திராவிடர்களுக்கிடையிலும் சீனர்களுக்கிடையிலும் ஒற்றுமையைக் காண முடியுமா? இதேபோல் தான் மொழிக்குடும்பங்களும்!

துணை நூல்கள்:


1. D.Crystal. How language works. 2006. Penguin Books. England.
2. J.Lyons.. Language and Linguistics. 1981. Cambridge University Press. United Kingdom.
3. M. Ruhlen. L'origine des langues. 1997. Belin. Paris.
4. Science & Vie. Une seule langue e'tait – elle a' l'origine de toutes? 2006. Paris.
5. R. Breton. Atlas des langues du monde. 2003. Editions Autrement. Paris.
6. Georges Kersaud. Langues sans frontie'res 2001. Editions Autrement. Paris.
7. M.Malherbe Les langages de l'humanite' 1983. Editions Seghers. Paris.


## தில்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் தமிழ் இலக்கியவியல் தனித்துறை! தமிழ்நாடு அரசு ரூ. 5 கோடி நிதியுதவி

தில்லி ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் தமிழ் இலக்கியவியல் தனித்துறை தொடங்க தமிழ்நாடு அரசு ரூ. 5 கோடி நிதியுதவி வழங்க ஆணையிட்டுள்ளது. இத்துறை வாயிலாக, ஒப்பாய்வு, முதுகலைத் தமிழிலக்கியப் படிப்பு, வல்லுநர்வழி மொழியாக்கம், விருந்துநிலைப் பேராசிரியர்வழி ஆய்வுப் பெருந்திட்டம், முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்குப் புத்தாக்கப் பயிற்சி, தமிழாசிரியர்களுக்கு ஆய்வுப் பயிலரங்கம், அயலகப் பல்கலைக்கழகங்களுடன் ஒருங்கிணைந்து செயல்படுதல், தரமான நூல்களை வெளியிடுதல் ஜே.என்.யூ. தமிழியல் எனும் பெயரில் 100 பக்க அளவில் ஆண்டுக்கு இருமுறை ஆய்வு இதழ் வெளியிடுதல் போன்ற பணிகள் மேற்கொள்ளப்படவுள்ளன.

# நிகண்டுகளில் சொல்வளம் – கடல்



முனைவர் **இரா. பன்னிருகைவடிவேலன்**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
வேல்ஸ் அறிவியல் தொழில் நுட்ப ஆராய்ச்சி நிறுவனம், சென்னை 600 117

கடல், கடற்கரை என்றாலே மகிழ்ச்சி! கடற்கரைக்குச் செல்லும் சிறார் முதல் மூத்தோர் என அனைவருக்கும் கொண்டாட்டம்! வங்காள விரிகுடா, அரபிக்கடல். இந்துமாக்கடல், பசிபிக் கடல், அட்லாண்டிக் கடல், ஆர்டிக்கடல், தென்கடல் எனக் கடலில் பலபிரிவுகள் உள்ளன.

வங்கக்கடல், அரபிக்கடல், செங்கடல், கருங்கடல், மத்திய தரைக்கடல், பாரசீக வளைகுடா எனக் கடலுக்குப் பலபெயர்கள் உள்ளன. ஆனால் உலகம் முழுவதும் ஒரே கடல்தான் இருக்கிறது! நம் நிகண்டுகளில் கடல் என்ற ஒரு சொல்லுக்குப் பலபெயர்கள் உள்ளன. அந்த அளவிற்கான சொல்வளம் கொண்ட மொழி நம் தமிழ்மொழி.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களில் வாழ்ந்த மக்கள் தம் நிலம் சார்ந்த பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள் ஆகியனவற்றில் சொல்வளங்கள் நிறைந்துள்ளன. மேலும், தமிழ் நிகண்டுகளில் பல அரிய சொல்வளங்கள் புதைந்துள்ளன.

கடல் kaṭal, n. < கட-. [T. kaḍali, K. M. kaḍal, Tu. kaḍalu.] 1. Sea; சமுத்திரம். (திவா.) 2. A large number = 10 சங்கம் = 10,000 billions; ஒரு பேரெண். (பிங்.) 3. The 24th nakṣatra, so called from Varuṇa the Sea-god being the deity of the constellation; சதயநாள். (சங். அக.) 4. Abundance; மிகுதி. பண்டங்கள் கடலாய்க் கிடக்கின்றன. 5. Cow; பசு. (அக. நி.)

## கடல்

### திவாகரம்

அத்தி பௌவம் அளக்கர் ஆர்கலி
ஆழி பெருநீர் அம்பரம் முந்நீர்
உப்பு வீரை சக்கரம் சாகரம்
வேலை வெள்ளம் மகராலயம் நேமி
சலநிதி வாரி சலதி அலையே
பாராவாரம் உததி சமுத்திரம்
பரவை உவாவே நரலை புணரி வாரிதி
வேலாவலயம் கார்கோள் ஓதம்
வாருணம் சிந்து வாரம் அம்புராசி
(கார்மலி) உவரி கடல் எனக் கருதுவர். – 878.

### பிங்கல நிகண்டு

அம்பரம் ஆர்கலி அளக்கர் தோயம்
அம்புராசி மகராலயம் பரவை
சலதி பௌவம் மகோததி சலநிதி
வீரை வேலாவலயம் நீர் வெள்ளம்
வாரி வேலை வாருணம் புணரி
சிந்து முந்நீர் தொன்னீர் நரலை
சக்கரம் உந்தி சலராசி உப்பு
உததி சாகரம் சமுத்திரம் நேமி
நதிபதி பாராவாரம் பயோததி
வாரிதி வாரணம் வலையம் அத்தி
ஆழி பெருநீர் அலை உவாவே
உவரி சிந்துவாரம் ஓதம்
அரியே குரவை அழுவம் தெண்டிரை
கார்கோள் அனைத்தும் கடலின் பெயரே – 584

1.அத்தி (திவா. 878, பிங். 584, சூடா. 370, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 523, அபி.மாலை. 1225)

2.அப்பு (அபி.மாலை. 1225)

3.அம்பரம் (திவா. 878; 2005, பிங். 584, சூடா. 369; 878, பாரதிதீப. 257; 533, ஆ. நி. 155, நாமதீப. 521,அபி. மாலை. 1225, பிங். 3070,)

4.அம்புராசி (திவா. 878, பிங். 584, சூடா. 369, ஆ. நி. 155,நாமதீப. 522)

5.அம்போதி (நாமதீப. 522)

6.அரலை (ஆ. நி. 155)

7.அரி (பிங். 584, சூடா. 369, ஆ. நி. 155, நாமதீப. 523)

8.அலை (திவா. 878, பிங். 584, பாரதிதீப. 256, ஆ. நி. 155, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

9.அழுவம் (பிங். 584, தமிழ் உரிச். 3606)

10.அளக்கர் (திவா. 878; 2008, பிங். 584, சூடா. 370; 999, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி. மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

11.அளவை (ஓர்எண்) (பிங். 3268)

12.அன்னவம் (சூடா. 370, ஆ. நி. 155, நாமதீப. 522,அபி. மாலை. 1225)

13.ஆரல் (ஆ. நி. 155)

14ஆர்கலி (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

15.ஆழி (திவா. 878, பிங். 584, சூடா. 370, 982, பாரதிதீப. 257, ஆ. நி. 155,நாமதீப. 522, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

16.இரத்தினாகரம் (நாமதீப. 522)

17.இறவாலையம் (பாரதிதீப. 256)

18.உடுவை (தமிழ் உரிச். 3606)

19.உததி (திவா. 878, பிங். 584, சூடா. 370, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1225)

20.உந்தி (பிங். 584, 3196, சூடா. 369, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

21.உப்பு (திவா. 878, பிங். 584, சூடா. 370; 866, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

22.உரவுநீர் (தமிழ் உரிச். 3607)

23.உவரி (திவா. 878, பிங். 584, சூடா. 370, பாரதிதீப. 256, ஆ. நி. 155, அரு. நி. 121, நாமதீப. 522, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

24.உவர் (அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

25.உவா (திவா. 878, பிங். 584, ஆ. நி. 155, தமிழ் உரிச்.3606)

26.ஓதம் (திவா. 878, பிங். 584; 3250 சூடா. 370, ஆ. நி. 155, நாமதீப. 522, தமிழ் உரிச். 3606)

27.கராலையம் (ஆ. நி. 155)

28.கலி(அபி.மாலை. 1225)

29.கார்கோள் (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

30.குரவை (பிங். 584, சூடா. 369, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1225, தமிழ் உரிச். 3606)

31.கூலராசி (பாரதிதீப. 256)

32.சக்கரம் (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1223)

33.சமுத்திரம் (திவா. 878, பிங். 584, சூடா. 370, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1223)

34.சலதி (திவா. 878, பிங். 584, சூடா. 370, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1223)

35.சலந(நி)தி (திவா. 878, பிங். 584, சூடா. 370, ஆ. நி. 155, அபி.மாலை. 1223)

36.சலராசி (பிங். 584, ஆ. நி. 155, அபி.மாலை. 1223)

37.சவர் (பாரதிதீப. 256)

38.சாகரம் (திவா. 878, பிங். 584, சூடா. 370, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 521)

39.சிந்து (திவா. 878, பிங். 584; 3522, சூடா. 369; 863, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி. மாலை. 1223)

40.சிந்துவாரம் (பிங். 584)

41.திருப்பொறி (சூடா. 1165)

42.திரை (பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 521)

43.தெண்டிரை (பிங். 584, சூடா. 369, ஆ. நி. 155, அபி. மாலை. 1223, தமிழ் உரிச். 3606)

44.தொன்னீர் (பிங். 584, தமிழ் உரிச். 3606)

45.தோயநிதி (நாமதீப. 521)

46.தோயம் (பிங். 584)

47.நதிபதி (பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 256, ஆ. நி. 155, அபி.மாலை. 1223)

48.நரலை (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1223,தமிழ் உரிச். 3606)

49.நிதிபதி (நாமதீப. 523)

50.நீராழி (சூடா. 369, அபி.மாலை. 1223)

51.நீர் (பிங். 584, தமிழ் உரிச். 3606)

52.நேமி (திவா. 878, பிங். 584, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 521,அபி.மாலை. 1223)

53.பசு (அக. நி.838, அரு. நி. 121, பொதி.நி. II : 541)

54.பயோததி (பிங். 584,அபி.மாலை. 1223)

55.பயோதரம் (ஆ. நி. 155)

56.பயோநிதி (அபி.மாலை. 1223)

57.பரப்பு(அபி.மாலை. 1223)

58.பரவை (திவா. 878; 2225, பிங். 584; 3788, சூடா. 369, பாரதிதீப. 256; 5077, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1223, தமிழ் உரிச். 3606)

59.பவ்வம் (நாமதீப. 521)

60.பாராடை (நாமதீப. 523)

61.பாராவாரம் (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 257, ஆ. நி. 155, அபி.மாலை. 1223)

62.பாருடை (ஆ. நி. 155)

63.புணரி (திவா. 878; 2221, பிங். 584; 3851, பாரதிதீப. 257; 575, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1223, தமிழ் உரிச். 3606)

64.பூவாடை (பாரதிதீப. 257)

65.பெருநீர் (திவா. 878, பிங். 584, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 522, அபி.மாலை. 1223, தமிழ் உரிச். 3606)

66.பௌவம் (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 256, ஆ. நி. 155, அபி.மாலை. 1223)

67.மகராலயம் (சமுத்திரம்) (திவா. 878, பிங். 584, பிங். 3268, சூடா. 369, அபி.மாலை. 1223)

68.மகராலையம் (பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 521)

69.மகோததி (பிங். 584, பாரதிதீப. 257, ஆ. நி. 155, அபி. மாலை. 1223)

70.மணியாகரம் (ஆ. நி. 155)

71.முந்நீர் (திவா. 878, பிங். 584, சூடா. 369, பாரதிதீப. 256, நாமதீப. 521, தமிழ் உரிச். 3606)

72.முன்னீர் (ஆ. நி. 155, தமிழ் உரிச். 3606)

73.வரி (ஆ. நி. 155, தமிழ் உரிச். 3606)

74.வருணம் (ஆ. நி. 155)

75.வலயம் (பிங். 584)

76.வாரணம் (பிங். 584; 4054, சூடா. 370; 991, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1223)

77.வாரம் (திவா. 878, அபி.மாலை. 1223)

78.வாராகரம் (ஆ. நி. 155)

79.வாரி (திவா. 878; 2057, பிங். 584, சூடா. 370; 907, பாரதிதீப. 257; 544, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1223, தமிழ் உரிச். 3606)

80.வாரிதி (பிங். 584, சூடா. 370,அபி.மாலை. 1223)

81.வாருணம் (திவா. 878, பிங். 584; 4057, நாமதீப. 523, அபி.மாலை. 1223)

82.வாருதி (பாரதிதீப. 256, ஆ. நி. 155, நாமதீப. 523, அபி.மாலை. 1223)

83.விரிநீர் (ஆ. நி. 155)

84.வீங்குநீர் (தமிழ் உரிச். 3607)

85.வீரை (திவா. 878, பிங். 584; 4092, சூடா. 370, பாரதிதீப. 257, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1223)

86.வெள்ளம் (திவா. 878, பிங். 584; 4096, சூடா. 370, ஆ. நி. 155, நாமதீப. 522, தமிழ் உரிச். 3606)

87.வேலாவலயம் (திவா. 878, பிங். 584, சூடா. 369; 961, நாமதீப. 521, அபி.மாலை. 1223)

88.வேலாவலையம் (பாரதிதீப. 256, ஆ. நி. 155)

89.வேலை (திவா.878; 2126, பிங். 584; 4111, சூடா. 369; 946, பாரதிதீப. 256; 558, ஆ. நி. 155, நாமதீப. 521, அபி.மாலை. 1225)

இச்சொற்கள் தொகுக்கப்பட்ட நிகண்டுகள் பின்வருமாறு:

திவாகரம் – திவாகர முனிவர்;

பிங்கலம் – பிங்கல முனிவர்;

சூடாமணி நிகண்டு – மண்டல புருடர்;

அகராதி நிகண்டு – சிதம்பர ரேவணச் சித்தர்;
உரிச்சொல் நிகண்டு – காங்கேயர்;

கயாதர நிகண்டு – கயாதரர்;

வடமலை நிகண்டு – ஈசுர பாரதியார்;

ஆசிரிய நிகண்டு – ஆண்டிப்புலவர்;

நாமதீப நிகண்டு – சிவசுப்பிரமணியக் கவிராயர்;
நாநார்த்த தீபிகை – முத்துசுவாமிப் பிள்ளை;

சிந்தாமணி நிகண்டு – வைத்தியலிங்கம் பிள்ளை;
அபிதான மணிமாலை;

அகராதி நிகண்டு;

அபிதான தனிச்செய்யுள் நிகண்டு – கோபாலசாமி நாயகர்;

நவமணிக் காரிகை நிகண்டு – அரசஞ்சண்முகனார்;
தமிழ் உரிச்சொற் பனுவல் – இராம சுப்பிரமணிய நாவலர்;
நீரரர் நிகண்டு – ஈழத்துப்பூராடனார் –

ஒருசொல் பல்பொருள் தொகுதி உரைபாடம் (நயநப்ப முதலியார்);

மஞ்சிகன் ஐந்திணைச் சிறுநிகண்டு (மஞ்சிகன்)

இவற்றின்வழி, கடலுக்கு உரிய சொற்கள் 89. சங்க இலக்கியங்களிலும் பிற இலக்கியங்களிலும் கடலைக் குறிப்பதற்காக இவற்றுள் பல சொற்கள் இடம்பெற்றுள்ளன. இவை அனைத்தையும் தொகுத்து நோக்குவது தமிழ்மொழியின் சொற்பொருள் வளத்தை அறிய உதவும்.

# கதிரவன் – ஒருபொருட் பன்மொழி

| | | |
|---|---|---|
| அரி, | கதிரோன், | பகலோன், |
| அலரி, | கனலி, | பகவன், |
| அழலவன், | கனலோன், | பரிதி, |
| அனலி, | சான்றோன், | பனிப்பகை, |
| ஆயிரங்கதிரோன், | சுடரோன், | பொழுது, |
| ஆயிரஞ்சோதியுள்ளோன், | சூரன், | மணி, |
| இருள்வலி, | சூரியன், | மாலி, |
| இனன், | செங்கதிர், | விண்மணி, |
| எல், | செங்கதிரோன், | விரிச்சிகன், |
| எல்லி, | செஞ்சுடர், | வெஞ்சுடர், |
| எல்லை, | ஞாயிறு, | வெய்யோன், |
| எல்லோன், | தேரோன், | வெயிலோன், |
| என்றூழ், | பகல், | வேந்தன் |
| ஒளியோன், | பகலவன், | |

**Government of Tamil Nadu**
**Directorate of Tami Etymological Dictionary Project**

Urban Administrative Office Campus
First Floor, No.75, Santhome High Road, M.R.C. Nagar, Chennai – 600 028

: 044 – 29520509 Veeramamunivaraward@gmail.com

# Veeramamunivar Award – 2022

Govt. have issued orders for the bestowing of Veeramamunivar Award to a befitting scholar of repute, who shall be a foreigner by birth, and whose mother tongue shall not be Tamil: She / He shall be a scholar of excellence and eminence who has strided on the path of Veeramanunivar, replicating his literary and creative style: has produced minor literatures, and has brought out translations and also who has been an outstanding scholar on Lexicography and who has also published Tamil Dictionaries. The awardee will receive rupees Two lakh cash and also a gold medal of one sovereign (One Pound) along with a Citation. Those scholars who are qualified to receive the award (a prize along with Citation) shall download the Application form from sorkuvai.com and the filled up applications should be sent to the above mentioned E-mail id, or to postal address on or before 30.09.2022, 5: 00 p.m.

Director

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை–600028

: 044 – 29520509 Veeramamunivaraward@gmail.com

# வீரமாமுனிவர் விருது – 2022

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள, தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத, பிறப்பால் வெளிநாட்டைச் சார்ந்த தகுதிவாய்ந்த அறிஞருக்கு "வீரமாமுனிவர் விருது" வழங்கப்பெறவுள்ளது. விருதாளருக்கு உரூபா இரண்டு இலக்கமும், ஒரு சவரன் தங்கப் பதக்கமும் தகுதியுரையும் வழங்கப்பெறும். தகுதிவாய்ந்த அறிஞர்கள் "சொற்குவை.காம்" (sorkuvai.com) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தை நிரப்பி உரிய சான்றுகளுடன் இணைத்து 30.09.2022 ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ அல்லது இயக்கக முகவரிக்கோ அனுப்ப வேண்டும்.

இயக்குநர்

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம்,

எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர், சென்னை–600028

: 044 – 29520509 pavanarvirudhu@gmail.com

## தேவநேயப் பாவாணர் விருது – 2022

தமிழ் வேர்ச்சொல் ஆய்வு, அகராதி உருவாக்குதல் மற்றும் தனித்தமிழைப் போற்றுவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் தகுதிவாய்ந்த உள்நாட்டு அறிஞர் ஒருவருக்குத் **'தேவநேயப் பாவாணர் விருது'** தமிழ்நாடு அரசால் வழங்கப்பெறவுள்ளது. விருதாளருக்கு உரூபாய் இரண்டு இலக்கமும், ஒரு சவரன் தங்கப்பதக்கமும். தகுதியுரையும் வழங்கப்படும். விருதுபெறுவதற்குத் தகுதிவாய்ந்த தமிழறிஞர்கள் சொற்குவை.காம். (sorkuvai.com) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தை நிரப்பி உரிய சான்றுகளுடன் இணைத்து **30.09.2022**ஆம் நாள் மாலை 5.00மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் வழியாகவோ அல்லது இயக்கக முகவரிக்கோ அனுப்ப வேண்டும்.

**இயக்குநர்**

# வட்டார வழக்குச் சொற்கள் களஆய்வு

## திருவள்ளூர் மாவட்டம் ஊத்துக்கோட்டை வட்டம் கூடியம்



03.09.2022 ஆம் நாள், திருவள்ளூர் மாவட்டம் ஊத்துக்கோட்டை வட்டம் கூடியம் சிற்றூர் (கிராம) சுற்றுவட்டாரப் பகுதிவாழ் மக்களிடம் அவர்கள் பேசும் வட்டார வழக்குச் சொற்கள் குறித்த களஆய்வினை அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மேற்கொண்டார். கள ஆய்வின்போது அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு.வே.பிரபு, பதிப்பாசிரியர் திரு.கி. தமிழ்மணி, ஓட்டுநர் திரு.வெ.சுதாகர் ஆகியோர் உடன் இருந்தனர்.

தமிழ்நாடு அரசு,
தமிழ் வளர்ச்சித் துறை

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

மற்றும்

ஸ்ரீ எஸ் இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி – சாத்தூர்
இணைந்து நடத்திய

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022





தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் சாத்தூர், ஸ்ரீ எஸ் இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரி இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022 நிகழ்வு 11.08.2022 ஆம் நாள் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் பயிற்சி ஒருங்கிணைப்பாளர் முனைவர் பி.ஸ்ரீதேவி வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் சே.கணேஷ்ராம் தலைமை வகிக்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரை மற்றும் சொற்குவை அறிமுக உரையும் வழங்கினார். நிகழ்வில் மதுரை – உலகத் தமிழ்ச் சங்கத்தின் மேனாள் இயக்குநர் (பொ) முனைவர் க.பசும்பொன், "மொழியியல் – சொற்பிறப்பு , கலைச்சொல்லாக்கம்" எனும் பொருண்மையிலும், இராஜபாளையம், இராஜூக்கள் கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் வி.கலாவதி, "மொழிபெயர்ப்புக் கலை" எனும் பொருண்மையிலும், சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா, "இலக்கியத்தில் கலைச்சொற்கள்" எனும் பொருண்மையிலும், மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறை மேனாள் துறைத்தலைவர் தகைசால் பேராசிரியர் வீ.ரேணுகாதேவி, "அகராதியியலின் நோக்கும் போக்கும்" எனும் தலைப்பிலும், ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரியின் கணினி அறிவியல்துறைத் தலைவர் முனைவர் அ.மெர்சிராணி "கணினித்தமிழ் வளர்ச்சி – சிக்கல்களும் தீர்வுகளும்" எனும் பொருண்மையிலும் உரையாற்றி மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர். பேராசிரியர்கள், மாணவர்கள், தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவில் ஸ்ரீ எஸ்.இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் போ. கோகிலா நன்றியுரை கூறினார். நிகழ்வில் பங்கேற்ற மாணவர்களுக்குச் "சொற்குவை மாணவத் தூதுவர்" சான்றிதழ் வழங்கப்பட்டது.

## தமிழ்நாடு அரசு,
## தமிழ் வளர்ச்சித் துறை
## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
## அகரமுதலித் திட்ட இயக்ககம்
### மற்றும்
### ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரித் தமிழ்த்துறை
### சங்கப் பலகை – இலக்கிய மன்றம்–சிவகாசி
### இணைந்து நடத்திய

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022






தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் சிவகாசி ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரித் தமிழ்த்துறை சங்கப் பலகை – இலக்கிய மன்றம் இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022 நிகழ்வு 11.08.2022 ஆம் நாள் பிற்பகல் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரியின் தமிழியல்துறைத் தலைவர் திரு. செந்தில்நாதன் வரவேற்புரை (ம) அறிமுகவுரையாற்ற, கல்லூரிச் செயலர் திரு. அ.பா. செல்வராசன் தலைமையுரையாற்றினார். கல்லூரி முதல்வர் முனைவர் சீ.கிருஷ்ணமூர்த்தி முன்னிலை வகிக்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரையாற்ற, இயக்ககத் தொகுப்பாளர் திரு.வே. பிரபு நோக்கவுரையாற்றினார். கல்லூரியின் துணைமுதல்வர்கள் முனைவர் பெ.கி. பாலமுருகன், பேரா. இரா. முத்துலட்சுமி ஆகிய இருவரும் வாழ்த்துரை வழங்க, நிகழ்வில் மதுரை – உலகத் தமிழ்ச் சங்கத்தின் மேனாள் இயக்குநர் (பொ) முனைவர் க.பசும்பொன், "மொழியியல் – சொற்பிறப்பு , கலைச்சொல்லாக்கம்" எனும் பொருண்மையிலும், சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா, "இலக்கியத்தில் கலைச்சொற்கள்" எனும் பொருண்மையிலும், மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறை மேனாள் துறைத்தலைவர் தகைசால் பேராசிரியர் வீ.ரேணுகாதேவி, "அகராதியியலின் நோக்கும் போக்கும்" எனும் தலைப்பிலும், கல்லூரியின் தமிழியல்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் ஜெ.அமுதா, "மொழிபெயர்ப்புக் கலை" எனும் தலைப்பிலும், உதவிப் பேராசிரியர் திருமதி க. பொற்கொடி, " கணினித்தமிழ் வளர்ச்சியில் சிக்கல்களும் தீர்வுகளும்" எனும் தலைப்பிலும் உரையாற்றி மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர். பேராசிரியர்கள், மாணவர்கள், தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவில் உதவிப் பேராசிரியர் திருமதி க. பொற்கொடி நன்றியுரை கூறினார். நிகழ்வில் பங்கேற்ற மாணவர்களுக்குச் "சொற்குவை மாணவத் தூதுவர்" சான்றிதழ் வழங்கப்பட்டது.

தமிழ்நாடு அரசு,
தமிழ் வளர்ச்சித் துறை
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
மற்றும்
இராஜுக்கள் கல்லூரி–இராஜபாளையம்
இணைந்து நடத்திய

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022





தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் இராஜபாளையம் இராஜுக்கள் கல்லூரி இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022 நிகழ்வு 12.08.2022 ஆம் நாள் முற்பகல் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். வி.கலாவதி வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் த.வெங்கடேஸ்வரன் தலைமையுரையாற்றினார். கல்லூரித் துணை முதல்வர் முனைவர் கி.சிவராமமூர்த்தி வாழ்த்துரை வழங்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரையாற்றினார், நிகழ்வில் சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா, "இலக்கியத்தில் கலைச்சொற்கள்" எனும் பொருண்மையிலும், மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறை மேனாள் துறைத்தலைவர் தகைசால் பேராசிரியர் வீ.ரேணுகாதேவி, "அகராதியியலின் நோக்கும் போக்கும்" எனும் பொருண்மையிலும், மதுரை – உலகத் தமிழ்ச் சங்கத்தின் மேனாள் இயக்குநர் (பொ) முனைவர் க.பசும்பொன், "மொழியியல் – சொற்பிறப்பு , கலைச்சொல்லாக்கம்" எனும் தலைப்பிலும், கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவர் உதவிப்பேராசிரியர் முனைவர் வி.கலாவதி, "மொழிபெயர்ப்புக் கலை" எனும் தலைப்பிலும், உதவிப் பேராசிரியர் திரு. இராம்குமார், "கணினித்தமிழ்" எனும் தலைப்பிலும் உரையாற்றி மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர். பேராசிரியர்கள், மாணவர்கள், தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவில் உதவிப் பேராசிரியர் திருமதி சு.சத்யா நன்றியுரை கூறினார். நிகழ்வில் பங்கேற்ற மாணவர்களுக்குச் "சொற்குவை மாணவத் தூதுவர்" சான்றிதழ் வழங்கப்பட்டது.

**தமிழ்நாடு அரசு,**
**தமிழ் வளர்ச்சித் துறை**
**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்**
**அகரமுதலித் திட்ட இயக்ககம்**
**மற்றும்**
**அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி – தமிழ்த்துறை –கோவில்பட்டி**
**இணைந்து நடத்திய**

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022






தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் கோவில்பட்டி அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி – தமிழ்த்துறை இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022 நிகழ்வு 12.08.2022 ஆம் நாள் பிற்பகல் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். கோ.சந்தனமாரியம்மாள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் கி. நிர்மலா தலைமையுரையாற்றினார்., அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரையாற்றினார், நிகழ்வில் பொருண்மையிலும், மதுரை – உலகத் தமிழ்ச் சங்கத்தின் மேனாள் இயக்குநர் (பொ) முனைவர் க.பசும்பொன், "மொழியியல் – சொற்பிறப்பு , கலைச்சொல்லாக்கம்" எனும் தலைப்பிலும்,கல்லூரியின் ஆங்கிலத்துறை உதவிப்பேராசிரியர் திரு கோ.செந்தில்குமரன், "மொழிபெயர்ப்புக் கலை" எனும் தலைப்பிலும், சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோச்சனா, "இலக்கியத்தில் கலைச்சொற்கள்" எனும் பொருண்மையிலும், மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறை மேனாள் துறைத்தலைவர் தகைசால் பேராசிரியர் வீ.ரேணுகாதேவி, "அகராதியியலின் நோக்கும் போக்கும்" எனும் தலைப்பிலும் கல்லூரியின் உதவிப் பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் கோ.சந்தனமாரியம்மாள், "கணினித்தமிழ் வளர்ச்சி–சிக்கல்களும் தீர்வுகளும் எனும் தலைப்பிலும் உரையாற்றி மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர். பேராசிரியர்கள், மாணவர்கள், தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவில் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திரு வே.பிரபு நன்றியுரை கூறினார். நிகழ்வில் பங்கேற்ற மாணவர்களுக்குச் "சொற்குவை மாணவத் தூதுவர்" சான்றிதழ் வழங்கப்பட்டது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 115–ஆவது கூட்டம்






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 23.08.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 115–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் மேனாள் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநரும், மேனாள் அகரமுதலி இயக்கக (மு.கூ.பொ.) இயக்குநருமாகிய முனைவர் கா.மு.சேகர் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டார். அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. நா.சு. சிதம்பரம் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 255 தமிழ்க் கலைச்சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | | |
|---|---|---|
| Chironomy | – | ஊமைக்கூத்து |
| Flip– flop | – | புரட்டல் |
| Fresh–blown | – | அன்றலர்ந்த |
| Needious | – | தேவைத்தன்மை |
| Orderlies | – | பணி வினைஞர்/பணித்துணைவர் |
| Pharmaceutical manufactory | – | மருந்தாலை |
| Pop up | – | எதிர்பாராத் தோன்றல் |
| Sauna room | – | நீராவிக் குளியலறை |
| Scaler learner | – | திறன்மிகு பயிலுநர் |
| Solid performance | – | உறுதிச் செயல்பாடு |
| Sologamy | – | தன்மணம் |
| Stinky | – | தீ மணம் |
| Swift booster | – | விரைவூக்கி |
| Teat cup | – | கறப்புக் கிண்ணம் |
| Ultra microscope | – | மீ நுண்ணோக்கி |
| Virtual card | – | மெய்ந்நிகர் அட்டை |

# தமிழ்க் கலைக்கழகத்தின் 116–ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 30.08.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 116–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, மற்றும் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு,அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 200 தமிழ்க் கலைச்சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது. அவற்றில் சில..

| | | | |
|---|---|---|---|
| 1 | Air lift pump | – | காற்றெக்கி |
| 2 | Anchor | – | நெறியாளுநர் |
| 3 | Barcode marketing | – | வரிக்குறி வணிகம் |
| 4 | Bionic eye | – | செயற்கைக் கண் |
| 5 | Brand extension | – | வணிகக்குறி நீட்சி |
| 6 | Brand Service Company | – | வணிகக்குறி செயல் நிறுவனம் |
| 7 | Challenger sale | – | சூவல் விற்பனை |
| 8 | Commercial telematics | – | தொலை வணிகமுறைக் கணினி |
| 9 | Defenestration | – | அதிகாரப் பதவி நீக்கம் |
| 10 | Des vu | – | நினைவக விழிப்புணர்வு |
| 11 | Eye level line | – | பார்வை மட்டக் கோடு |
| 12 | Fakester | – | போலியர் |
| 13 | Financial Optimization | – | நிதி மேம்படுத்தல் |
| 14 | Global Trade Compliance | – | உலக வணிக இணக்கம் |
| 15 | Gluning | – | ஒட்டிப்பிணைத்தல் |
| 16 | Interception drain | – | தடுப்பு வடிகால் |
| 17 | Kalon | – | அகப்புற அழகு |
| 18 | Migratory polyarthritis | – | பல் மூட்டு அழற்சி |

தமிழ்நாடு அரசு,
தமிழ் வளர்ச்சித் துறை
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
மற்றும்
திருவள்ளூர் திருமுருகன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி
இணைந்து நடத்திய

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022








தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் திருவள்ளூர் திருமுருகன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022 நிகழ்வு 03.09.2022 ஆம் நாள் முற்பகல் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் அ.பு.சரசுவதி வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் திருமதி. நா.லெ.அமுதாயி தலைமையுரையாற்றினார். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரையாற்றினார். நிகழ்வில் கல்லூரி அறங்காவலர் குழுத் தலைவர் திரு.தே.துரைவேலு, தாளாளர் திரு.ஆ.சேகர், நிருவாகக் குழு உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். மாணவர்களுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்து விழிப்புணர்வை ஏற்படுத்திய நிகழ்வின் நிறைவில் உதவிப் பேராசிரியர் திருமதி அனிதா அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வில் சொற்குவைத் திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் வே.பிரபு உடனிருந்தார்.

### தமிழ்நாடு அரசு,
### தமிழ் வளர்ச்சித் துறை
### செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
### அகரமுதலித் திட்ட இயக்ககம்
### மற்றும்
### விவேகானந்தா விஷன் மகளிர் கலை-கச்சூர்
### இணைந்து நடத்திய

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022






தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் திருவள்ளூர் மாவட்டம் ஊத்துக்கோட்டை வட்டம் கச்சூரில் அமைந்துள்ள விவேகானந்தா விஷன் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022 நிகழ்வு 03.09.2022 ஆம் நாள் பிற்பகல் சிறப்புற நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் எம்.இ.சரவணன் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் வி.இராதிகா தலைமையுரையாற்றினார். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் சிறப்புரையாற்றினார். நிகழ்வில் விவேகானந்தா விஷன் கல்விக் குழுமத் தலைவர் மற்றும் செயலாளர் கே.ராஜேஷ் அவர்கள், விவேகானந்தா விஷன் பள்ளி முதல்வர் எம்.கே.சபீனா அஜிஸ் அவர்கள் மற்றும் நிருவாகக் குழு உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். மாணவர்களுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்து விழிப்புணர்வை ஏற்படுத்திய நிகழ்வின் நிறைவில் உதவிப் பேராசிரியர் சுனித் பாபு அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வில் இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் வே.பிரபு அவர்கள் உடனிருந்தார்.

# 50ஆவது அமர்வை எட்டியது அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் நெறிப்படுத்தலில், 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 46–49 வரையிலான அமர்வுகள் 2022 ஆகத்து 12, 18, 26, செப்டம்பர் 02, ஆகிய நாள்களிலும், 50ஆவது அமர்வு 09.09.2022ஆம் நாளும் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

இப்பயிலரங்கின் 50ஆம் அமர்வில், பாரிசு நாட்டைச் சேர்ந்த பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனத்தின் இயக்குநரும் அகராதியில் அறிஞருமாகிய முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்கள், கலைச்சொல்லாக்க நெறிமுறைகளை எடுத்துரைத்து வாழ்த்துரை வழங்கினார். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழித்துறை மேனாள் தலைவரும் அகராதியில் அறிஞருமாகிய முனைவர் வ.ஜெயதேவன் அவர்கள், அகரமுதலி இயக்ககத்தின் தோற்றம் தொடங்கி நிகழ்காலம் வரையிலான செயற்பாடுகளை எடுத்துரைத்து வாழ்த்துரை வழங்கினார். சவுதி அரேபியா சாக்ரா பல்கலைக்கழகப் பேராசிரியர் மரு. மு.செம்மல் அவர்கள், பல்வேறு துறைசார் வல்லுநர்களின் ஒத்துழைப்போடு அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்களை வடிவமைக்க வேண்டும் என்று கூறி, வாழ்த்துரை வழங்கினார். மலேசியத் தமிழ்மொழிக் காப்பகத்தின் கலைச்சொல்லாக்கக் குழு துணைத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்கள் சுருக்கமாக வடிவமைக்கப்படும் கலைச்சொற்கள்தான் மக்களால் பயன்படுத்தப்பட்டு, நிலைத்து நிற்கும் என்றுகூறி வாழ்த்துரை வழங்கினார். நார்வே நாட்டைச் சார்ந்த மின்னச்சன் திரு. இங்கர்சால் அவர்கள் தம் வாழ்த்துரையில், சொற்களின் வளர்ச்சியே மொழியின் வளர்ச்சி என்றும், பயன்பாட்டில் இல்லாத சொற்களைப் புழக்கத்திற்குக் கொண்டுவரவேண்டும் என்றும் கூறினார்.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன், அகரமுதலி இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ.காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. 50ஆவது அமர்வில் தமிழார்வலர் திருமதி இரா. சீமா அவர்கள் திறம்பட நெறியாளுகை செய்தார்.

**12.08.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**

**பொறிஞர் கு. பாலசுப்பிரமணியன்**
இரும்புக் கட்டுமானத் தொழில் தலைவர், வியட்நாம்



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பிரான்சு



**தமிழ்த்திரு. நளினி இராகவன்**
மாணவி, பிரான்சு



**திரு. தருணாதித்தன் (எ) ஸ்ரீகிருஷ்ணன்,**
எழுத்தாளர், பெங்களூரு



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**
உரையாசிரியர், நூல் மதிப்புரையாளர், சென்னை



**18.08.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



**முனைவர் சீதாலட்சுமி**
இணைப்பேராசிரியர், ஆசிய மொழிகள் மற்றும் பண்பாடுகள் துறை, தேசியக் கல்விக் கழகம், நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம் , சிங்கப்பூர்.



**முனைவர் சா. உஷாகுமாரி**
பேராசிரியர், கால்நடை உடற்கூறியல் துறை, சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரி, சென்னை



**முனைவர் மா.மாதரி**
முன்னை புல முதன்மையர், வணிகவியல் துறை, கோயம்புத்தூர்.

**02.09.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



**திரு. மணிவேலுப்பிள்ளை**
மொழிபெயர்ப்பாளர், கனடா



**பொறிஞர் கு. பாலசுப்பிரமணியன்**
இரும்புக் கட்டுமானத் தொழில் தலைவர், வியட்நாம்



**முனைவர் சசிதா பாலமுருகன்**
இயக்குநர், அகரம் செந்தமிழ் மையம், இங்கிலாந்து



**பேரா. முனைவர் இரா. சீனிவாசகலு**
வணிகவியல் துறைத்தலைவர், வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர்கல்வி நிறுவனம், சென்னை

**26.08.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



**முனைவர் மெய். சித்ரா**
பகுதிநேர விரிவுரையாளர், ஸ்கோப், ஹாங்காங் மாநகர் பல்கலைக்கழகம், ஹாங்காங்



**திரு.நிக்கவெவெ சுமங்கல தேரர்**
மாணவர், பௌத்த மற்றும் பாலி பல்கலைக்கழகம், இலங்கை



**முனைவர் கா. லோகநாதசாமி**
இணைப்பேராசிரியர் (ம) தலைவர், கால்நடை உடற்கூறியல் (ம) உயிர்வேதியியல் துறை, கால்நடை மருத்துவக் கல்லூரி (ம) ஆராய்ச்சி நிலையம், திருநெல்வேலி



**முனைவர் பெ. கோபு**
உதவிப் பேராசிரியர், கால்நடை முதுநிலை அறிவியல் ஆராய்ச்சி நிலையம், காட்டுப்பாக்கம்

**09.09.2022ஆம் நாள் நடைபெற்ற 50ஆவது அமர்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



**பேரா. முனைவர் சீ.மு. முஹம்மது இஸ்மாயில்**
மேனாள் துணைவேந்தர், தென்கிழக்குப் பல்கலைக்கழகம், இலங்கை



**முனைவர் தம்மிக ஜயசிங்க**
முதுநிலை விரிவுரையாளர், சிங்களத்துறை, றுஹுணை பல்கலைக்கழகம், இலங்கை



**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**
ஹன்யாங் பல்கலைக்கழகம், சீயோல், தென்கொரியா



**முனைவர் மா. அசோக்குமார்**
உதவிப் பேராசிரியர், கால்நடை பொது சுகாதாரம் (ம) நோய் நிகழாய்வியல் துறை, சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரி, சென்னை



**முனைவர் நா. சுலோசனா**
உதவிப் பேராசிரியர், தமிழ்மொழி (ம) மொழியியல் புலம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை

# 50 ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிய அறிஞர்கள்

**முனைவர் ச. சச்சிதானந்தம்**
இயக்குநர், பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு




**திரு. இரா. திருமாவளவன்**
துணைத்தலைவர்,
கலைச்சொல்லாக்கக் குழு,
மலேசியத் தமிழ்மொழிக் காப்பகம்,
மலேசியா.



**திரு. இங்கர்சால்**
மின்னச்சன்,
வள்ளுவர் வள்ளலார் வட்டம்,
நார்வே



**முனைவர் வ.ஜெயதேவன்**
மேனாள் தலைவர், தமிழ்மொழித்துறை,
முன்னை முதன்மைப் பதிப்பாசிரியர்,
தமிழ்ப் பேரகராதித் திருத்தப்பணித் திட்டம்,
சென்னைப் பல்கலைக்கழகம்



**பேரா. மரு. மு.செம்மல்**
சாக்ரா பல்கலைக்கழகம்,
சவுதி அரேபியா



## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

**பொறிஞர் கு. பாலசுப்பிரமணியன்**

| | |
|---|---|
| Double Sliding Door | – இரட்டை சறுக்குக் கதவு |
| Single Personnel Door | – ஒற்றை மனிதக்கதவு |
| Mezzanine Floor | – இடைமட்ட மாடித்தளம் |

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**

| | |
|---|---|
| Treat –Brain | – கொள்வேட்கை |
| Queenager | – மூப்பரசி |
| Fexting | – குறுமறல் |

**தமிழ்த்திரு. நளினி இராகவன்**

| | |
|---|---|
| Fudgel | – பணிப்பாசாங்கு |
| Therapet | – நோய்நீக்கி / பிணிநீக்கி |
| Bird – Dog | – கடுந்தேடல் |

**திரு. தருணாதித்தன் (எ) ஸ்ரீகிருஷ்ணன்**

| | |
|---|---|
| Digital Currency | – எண்மிய நாணயம் |
| Bit Coin | – துணுக்குக் காசு |
| Digital Ledger | – எண்மியப் பேரேடு |

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

| | |
|---|---|
| Tole | – ஒளிர்பூச்சு |
| Lore | – பழங்கதை |
| Lint | – உதிரி நூல் |

**முனைவர் சீதாலட்சுமி**

| | |
|---|---|
| Brain – Gain | – அறிவுவளப் பெருக்கம் |
| Linguistic Capital | – மொழியியல் மூலதனம் |
| Conceptual Framework | – கருத்தமைவுக் கட்டமைப்பு |

**முனைவர் சா. உஷாகுமாரி**

| | |
|---|---|
| Dorsum Linguae | – நாக்கு மேற்பரப்பு |
| Ear Ossicles | – (நடு)காது சிறு எலும்புகள் |
| Ear Pinna | – காது மடல் |

**முனைவர் மா.மாதரி**

| | |
|---|---|
| Obsolescence | – வழக்கொழிவு. |
| Lender Of Last Resort | – உற்றுளி உதவுவோன் |
| Quorum | – குறை வெண் |

**முனைவர் மெய். சித்ரா**

| | |
|---|---|
| Presentation | – கருத்தறிவுறுத்தல் |
| Abaci | – மணிக்கணி |
| Contrapposto | – சமனில்லாச் சிலை |

**திரு. நிக்கவெவெ சுமங்கல தேரர்**

| | |
|---|---|
| Threshing Floor | – சூட்டுக் களம் |
| Atheistic | – கடவுளிலாச் சமயம் |
| Shrine Complex | – கோயில் வளாகம் |

**முனைவர் கா. லோகநாதசாமி**

| | |
|---|---|
| Mammogenesis | – பால்சுரப்பி வளர்ச்சியுறல் |
| Lactogenesis | – பால் சுரத்தல் |
| Melanogenesis | – தோல்நிறமி உருவாதல் |

**முனைவர் பெ. கோபு**

| | |
|---|---|
| Breeding Value | – மரபின மதிப்பு |
| Gene Therapy | – மரபணு மருத்துவம் |
| Replication | – தன்மை மாறா இரட்டிப்பு |

**திரு. மணிவேலுப்பிள்ளை**

| | |
|---|---|
| Agnosticism | – அறியொணா நெறி |
| Atomism | – கூறுபகுப்பு நெறி |
| Cognitivism | – அறிதிறநெறி |

**பொறிஞர் கு. பாலசுப்பிரமணியன்**

| | |
|---|---|
| Ocean Freight | – கடல்வழிச் சரக்குப் போக்குவரத்து |
| Origin Of Materials | – மூலப் பொருள் நாடு |
| Bill Of Lading | – கப்பல் ஏற்றுமதி ஒப்பந்தச் சீட்டு |

**முனைவர் சசிதா பாலமுருகன்**

Lucid – துல்லியத் தெளிவு
Amotivation – செயலூக்கமின்மை
Reprimand – கடிந்துரை

**பேரா. முனைவர் இரா. சீனிவாசகலு**

Brain Storming –குழுச் சிந்தித்தல்
Social Audit – சமூகத்தணிக்கை
Conflict Of Interest – நலமுரண்

**பேரா. முனைவர் சீ.மு. முஹம்மது இஸ்மாயில்**

Land lord – போடியார்
Paddy field supervisor – முல்லைக்காரன்
Labour Supervisor – முகானைக்காரன்

**முனைவர் தம்மிக ஜயசிங்க**

Analytical Languages – பகுப்புநிலை மொழிகள்
Derivation – ஆக்கம்
Stop – அடிப்பொலி

**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**

Exon – வெளிப்புற மரபணுக் குறியீடு
Intron – உட்புறக் குறியீடற்றமரபணு
Apoptosis – செல்சிதைவு (அ)உயிரணு சிதைவு

**முனைவர் மா. அசோக்குமார்**

Epizootiology – விலங்குகளில் நோய் நிகழாய்வியல்
Zoonoses – இயற்கையில் விலங்குவழிப் பரவு நோய்கள்
Re – Emerging Diseases – மீள்பதிவு நோய்கள்

**முனைவர் நா. சுலோசனா**

Gynergy – பெண்ணாற்றல்
Womage – பெண் மேலாண்மை
Queer Theory – பால்புதுமையினர் கோட்பாடு

# தேநீர் உருவான கதை

சீன அரசர்கள் உணவாக்கக் கூடிய மரம், பழம், இலை, பூக்களை இனம் காண்பதில் காலங்காலமாக ஈடுபட்டு வந்தனர். அவ்வாறான கண்டுபிடிப்புகளுக்கு அடிமைகளைப் பயன்படுத்தி வந்தனர்.

மரத்தின் பகுதிகளை உண்டு, ருசிபார்த்து கூறும் வேலை அடிமைகளுக்குப் பணிக்கப்பட்டது. அவற்றை உண்டபின் அடிமைகள் உயிருடன் இருந்தால் அவை உணவாகக் கொள்ளக்கூடிய மரங்கள், இறந்துபோனால் உணவாகக் கொள்ள முடியாத மரங்கள் என முடிவு செய்தனர்.

இவ்வாறுதான் சீன பேரரசர்களில் ஒருவரான ஸென்னொங் (Shennong) என்பவரும் தனது தாவர வகை உணவு ஆராய்ச்சியில் ஆர்வமுள்ளவராக இருந்தார். இவர் ஒருநாள் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்து ஒரு பாத்திரத் திற்குள் நீரைக் கொதிக்க வைத்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அம்மரத்தின் இலைகள் அப்பாத்திரத்திற்குள் விழுந்தன. சிறிதுநேரம் கழித்து அந்நீரை அவர் பருகிய போது ஒரு வகை புத்துணர்ச்சியும், உற்சாகமும் ஏற்படுவதை உணர்ந்தார். இந்நிகழ்விலிருந்துதான் தேநீர் பருகும் வழக்கம் உருவானது. அந்த மரமே பின்நாளில் தேயிலை மரம்(செடி) என வழங்கப்பட்டது.

தேயிலை, தேநீர் என்பவற்றில் வரும் முன்னொட்டான தே என்பது சீனச் சொல். இலை நீர் என்பன தமிழ்ச் சொல் தேயிலையும் தேநீரும் இருமொழிச் சொற்கள் (Hybrid) ஆகும்.

**தேயிலை = தே+இலை**

நன்றி : தெரியத் தெரியத் தெரியாமை தெரியும்

# தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் வல்லுநர் குழுக் கூட்டம்!




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறைவாரியாக வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு சொற்குவையில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன. அந்தவகையில், 15.09.2022ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் வேளாண்மைத்துறை வல்லுநர் குழுக் கூட்டம், கோவை – தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது. "கலைச் சொல்லாக்கம்" எனும் பொருண்மையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் வேளாண்மைப் பல்கலைக்கழக முதன்மையர் – பதிவாளர் முனைவர் ந.வெங்கடேச பழனிசாமி அவர்கள் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பிக்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் நோக்கவுரையாற்றினார். கூட்டத்தில், தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்தைச் சார்ந்த இணைப்பேராசிரியர்கள் முனைவர் இரா. மணிமேகலை, முனைவர் மு. கல்பனா, உதவிப்பேராசிரியர்கள் முனைவர் சு. சண்பகவள்ளி, முனைவர் செ.கோகிலவாணி, முனைவர் த. முருகானந்தி, முனைவர் சு. இராஜேஷ், முனைவர் ந. ஸ்ரீதரன், முனைவர் தி. இளையபாரதி, முனைவர் இரா. பரிமள ரங்கன், முனைவர் இரா. பூர்ணியம்மாள், முனைவர் பொ.கோ. கவிதா, முனைவர் அ. சுதா, முனைவர் இரா. விக்னேஸ்வரி, முனைவர் பெ. செங்கோட்டையன் ஆகியோர் கலந்துகொண்டு வேளாண்மைத்துறை சார்ந்த 750க்கும் மேற்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினர். இக்கூட்டத்தில் வழங்கப்பட்ட தமிழ்க் கலைச்சொற்களுள் சில :

Cultural diffusion – பண்பாட்டு ஊடுருவல்
Economic turmoil – பொருளியல் கொந்தளிப்பு / பொருளியல் குழப்பம்
Cyclonic rotation – இடஞ்சுழிச் சுற்று
Somaclonal variation – ஓரின மரபுக்கூறு வேறுபாடு
Dapok nursery – சுருள்பாய் நாற்றங்கால்
Contact herbicide –தொடுநஞ்சு களைக்கொல்லி
Megamerger – பேரிணைப்பு
Soil sensor – மண் உணரி
Coenocytic – பல கருவுள்ள
Day wilting – பகல்வாடல்

இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்க, கூட்டத்தின் முடிவில் பல்கலைக்கழக உதவி மக்கள் தொடர்பு அதிகாரி முனைவர் பெ. செங்கோட்டையன் நன்றி கூறினார்.

# பாரதியார் பல்கலைக்கழகத்தில் "சொற்குவை மாணவத் தூதுவர் விழிப்புணர்வுக் கூட்டம்"





கோயம்புத்தூர் பாரதியார் பல்கலைக்கழக மொழியியல் துறை மாணவ–மாணவிகளுக்குச்"சொற்குவை மாணவத் தூதுவர் விழிப்புணர்வுக் கூட்டம்" நடைபெற்றது. இந்நிகழ்வில் மொழியியல் துறைத் தலைவர் முனைவர் வி.எம். சுப்பிரமணி தலைமை தாங்கினார். அண்ணாமலை பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மையத்தின் மேனாள் இயக்குநர் பேராசிரியர் முனைவர் இராஜசேகரன் நாயர் அவர்கள் முன்னிலை வகிக்க, அகரமுதலி இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் மாணவ –மாணவியரிடையே சிறப்புரையாற்றினார்.